உ
முருகா

# திருப்புகழமிர்தம்

விக்ருதி மாத வெளியீடு ஆவணி



கைலாய மலை

ஆசிரியர்
**கிருபானந்தவாரி**

விலை] [அண 3





# "திருப்புகழமிர்தம்" சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| ஆண்டு 1-க்கு தபாற்கூலி யுள்பட | இந்தியா, சிலோன் | .... ரூ. 2-0-0 |
| | பர்மா, மலேயா முதலிய வெளிநாடுகளுக்கு | .... ரூ. 2-8-0 |
| | தனிப்பிரதி (உள்நாடு) | .... ரூ. 0-3-0 |

1. சந்தாதாரராகச் சேர விருப்பமுள்ளவர்கள் ஆண்டுக் கட்டணத்தை முன்னதாகவே செலுத்தவேண்டும். மணியார்டர் மூலம் சந்தாவைச் செலுத்துபவர்கள் மணியார்டர் கூப்பனில் விலாசத்தை விவரமாக எழுதியனுப்பவேண்டும்.

2. நமது பத்திரிகை ஒவ்வொரு சித்திரையினின்றே தொடங்கும். ஆதலால் நேயர்கள் எந்தத் திங்களில் சந்தாதாரராகச் சேர்ந்தாலும் அவ்வாண்டு சித்திரையினின்றே இதழ்கள் அநுப்பப்படும். ஒரு ஆண்டுக்குக் குறைந்த சந்தா கிடையாது.

3. நமது பத்திரிகை பிரதி இங்கிலீஷ் மாதம் 16-ந்தேதி தபாவில் சேர்க்கப்படும்.

4. இதழ் கிடைக்கப் பெருத சந்தா நேயர்கள், அத் தமிழ் மாதம் 15உக்குள் எழுதிப் பெறவேண்டும். அதற்கு மேல் எழுதுவோர் 0-3-0தபால் ஸ்டாம்பு அனுப்பினுல்தான் வேறு பிரதி அனுப்பப்படும். இதழ் கிடைக்கப் பெருதவர்கள் தமது ஊர் தபாலதிகாரிகளுக்குந் தெரிவிக்கவேண்டும். பலமுறை சரிபார்த்து இதழ்கள் தபாவில் சேர்க்கப்படுவதால் காரியாலயத்தில் தவறு நேர இடமில்லை.

5. விலாசமாறுவோர், தமது மாறுதல் விலாசத்தை உரிய காலத்திற்குள் நமது காரியாலயத்திற்கும், போஸ்டாபீசுக்கும் தெரிவிக்கவேண்டும். இன்றேல் பழைய விலாசத்திற்கே அடுத்த இதழ் அநுப்பப்படும். அதற்கு யாம் பொறுப்பாளியல்ல.

6. பதில் விரும்புவோர் ரிப்ளை கார்டில் எழுதவேண்டும் அல்லது ஸ்டாம்பு அனுப்பிவைக்க வேண்டும். அவ்விதம் செய்தால் தான் பதில் கிடைக்கும்.

7. மாதிரிப் பிரதி வேண்டுவோர் நான்கணு அனுப்பிப் பெறலாம்.

## திருப்புகழமிர்தம் ஆண்டு மலர்கள்

ஒவ்வொரு ஆண்டும் வெளிவந்த பன்னிரு புத்தகங்களையும் ஒன்ருகச் சேர்த்தது.

| | | | விலை. | தபாற்செலவு. |
|---|---|---|---|---|
| 1 | விஷு [ஆருவது] | ஆண்டுப் புத்தகம் | 2- 8-0 | 0-8-0 |
| 2 | விய [பதிஞேராவது] | ,, | 2-12-0 | 0-8-0 |
| 3 | சர்வசித்து [பன்னிரண்டாவது] | ,, | 3- 0-0 | 0-8-0 |
| 4 | சர்வதாரி [பதின்மூன்ருவது] | ,, | 3- 0-0 | 0-8-0 |
| 5 | விரோதி [பதினன்காவது] | ,, | 3- 0-0 | 0-8-0 |

மற்ற ஆண்டுப் புத்தகங்கள் கிடைக்காது.

திருப்புகழமிர்தம் காரியாலயம்,
144, சாமிநாயக்கன் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2

உ



ஓம் குஹாய நம:

# திருப்புகழமிர்தம்

குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்


| | | |
|---|---|---|
| மலர் 15 | விக்ருதி ஆண்டு ஆவணித் திங்கள் ஆகஸ்ட்-1950 | இதழ் 5 |


## திருப்புகழ்

பொது

உறவின்முறை கதறியழ ஊராரு மாசையற
பறைதிமிலை முழவினிசை யாகாச மீதுமுற
உலகிலுள பலரரிசி வாய்மீதி லேசொரியு
மந்தநாளில்-

உனதுமுக கருணைமல ரோராறு மாறிருகை
திரள்புயமு மெழில்பணிகொள் வார்காது நீள்
விழியு
முபயபத மிசைகுலவு சீரேறு நூபுரமும்
அந்தமார்பும்;

மறையறைய அமரர்தரு பூமாரி யேசொரிய
மதுவொழுகு தரவில்மணி மீதேமு நூலொளிர
மயிலின்மிசை யழகுபொலி யாளாய்மு ஞரடியர்
வந்துகூட-

மறலிபடை யமபுரமு மீதோட வேபொருது
விருதுபல முறைமுறையி லேயூதி வாதுசெய்து
மதலையொரு குதலையடி நாயேனை யாள இஙன்
வந்திடாயோ;

XV 15

பிறையெயிறு முரணசுரர் பேராது பாரில்விழ
அதிரஎழு புவியுலக மீரேழு மோலமிட
பிடிகளிறி னடல்நிரைகள் பாழாக வேதிசையில்
நின்றநாகம்-

பிரியநெடு மலையிடிய மாவாரி தூளியெழ
பெரியதொரு வயிறுடைய மாகாளி கூளியொடு
பிணநிணமு முணவுசெய்து பேயோடு
மாடல்செய வென்றதீரா;

குறமறவர் கொடியடிகள் கூசாது போய்வருட
*கரடிபுலி திரிகடிய வாரான கானில்மிகு*
குளிர்கணியி னிளமரம தேயாகி நீடியுயர்
குன்றுலாவி-

கொடியதொரு முயலகனின் மீதாடு வாருடைய
வொருபுறம துறவளரு மர்தர்பெ ருவருள்செய்
குமரகுரு பர அமரர் வானுடர் பேணஅருள்
தம்பிரானே.

## பதவுரை

பிறை எயிறு - பிறைச் சந்திரனைப் போன்ற வளைந்த பற்களை யுடையவர்களும், முரண் அசுரர் - மாறுபட்டவர்களுமாகிய அரக்கர்கள், பேராது பாரில் விழ - திரும்பாது மாண்டு மண்ணில் விழவும், எழு புவி அதிர - ஏழுதீவுகளுடன் கூடிய இப் பூமண்டலம் நடுங்கவும், உலகம் ஈரேழும் ஓலம் இட - பதினுலு உலகங்களும் அச்சத்தினுல் அலறி சத்தமிடவும், பிடிகளிறின் அடல் நிரைகள் பாழாக - பெண் யானை ஆண் யானைகளின் வலிமையான கூட்டங்கள் பாழ்பட்டு அழியவும், திசையில் நின்ற நாகம் பிரிய - எட்டுத்திசைகளின் முடிவில் நிற்கின்ற யானைகள் இடம் விட்டு நீங்கவும், நெடு மலை இடிய - நீண்ட மலைகள் இடிந்து விழவும், மாவாரி தூளி எழ - பெரிய கடல் வற்றித் தூள் உண்டாகவும், பெரியது ஒரு வயிறு உடைய - மிகவும் பெரிய வயிற்றையுடைய, மாகாளி கூளியுடன் - மகாகாளியானவள் பூதங்களுடன், பிணநிணமும் உணவு செய்து - பிணத்தின் தசைகளை உண்டு, பேயோடும் ஆடல் செய - பேய்களுடன் கூத்தாடவும், வென்ற தீரா - அரக்கர்களை வென்ற தீரரே! குறமறவர் கொடி அடிகள் - வீரமுள்ள குறவர் குலத்தில் தோன்றிய வள்ளியம்மையாரது திருப்பாதங்களை, கூசாது போய் வருட - சிறிதும் தயங்காமல் சென்று



பற்றி அருள்புரியும் பொருட்டு, கரடி புலி திரிகடிய வாரான கானில் - கரடிகளும் புலிகளும் இரை தேடிக்கொண்டு ஓயாது திரிவதற்கிடம் பெற்றதும் கொடுமையானதும் விசாலமானதும் ஆகிய கானகத்தில், மிகு குளிர் கணியின் இளம் மரம் அது ஆகி - மிகவும் குளிர்ச்சி பொருந்திய இளம் வேங்கை மரமாகி நின்று, நீடி உயர் குன்று உலாவி - செழிப்பும் உயரமும் உடைய மலைச் சாரலில் உலாவியவரே! கொடியது ஒரு முயலகனின் மீது - கொடியதாகிய ஒப்பற்ற முயலகன் மீது நின்று, ஆடுவாருடைய - திரு நடனம் புரிகின்றவருடைய, ஒரு புறம் அது உற வளரும் - ஒரு புறத்தைப் பெற்று விளங்குகின்ற, மாதா பெரு அருள்செய் - உமையம்மையார் பெற்று அருளிய, குமரகுருபர - குமரக் கடவுளாகிய குருமூர்த்தியே! அமரர் வானுடர் பேண அருள் - இறவாத தன்மையைப் பெற்ற தேவலோக வாசிகள் விரும்ப அருள்செய்கின்ற, தம்பிரானே - தனக்குமேல் தலைவன் இல்லாதவரே! உறவின் முறை கதறி அழ - சுற்றத்தார்கள் வாய்விட்டு புலம்பி அழவும், ஊராரும் ஆசை அற - ஊரில் உள்ளவர்கள் ஆசையை விடவும், பறை திமிலை முழவின் இசை - பறை திமிலை முதலிய வாத்தியங்களின் ஓசை, ஆகாச மீதும் உற - ஆகாயம் வரையிலும் ஒலிக்கவும், உலகில் உள பலர் அரிசி வாய் மீதிலே சொரியும் - உலகிலே உள்ள உறவினர் நண்பர் முதலியோர்கள் வாயிலே அரிசி சொரிகின்றதுமாகிய, அந்த நாளில் - முடிவான நாளில், உனது முக கருணை மலர் ஓர் ஆறும் - தேவரீருடைய கருணை பொழிகின்ற ஆறு திருமுகங்களும், ஆறு இருகை திரள்புயமும் - பன்னிரு கரங்களுடன் கூடிய திரண்ட புயங்களும், எழில் பணிகொள் வார் காதும் - அழகிய ஆபரணங்களை யணிந்த தொங்குகின்ற காதுகளும், நீள் விழியும் - நீண்ட கண்களும், உபய பதமிசை குலவு சீர் ஏறு நூபுரமும் - இரண்டு திருவடிகளில் விளங்கும் சிறப்புடைய பாதச்சிலம்பும், அந்த மார்பும் - அழகிய திருமார்பும், மறை அறைய - வேதங்களை ஓதவும், அமரர் தரு பூமாரியே சொரிய - தேவர்கள் கற்பக மலர் மழை பொழியவும், மது ஒழுகு உதர வில் மணிமீது - (பூமாலைகளினின்றும்) தேன் வடியும் வயிற்றில் கட்டியுள்ள ஒளி மிக்க மணிவடத்தின் மீது, முன்நூல் ஒளிர - முப் புரிநூல் ஒளி செய்யவும், மயிலின் மிசை அழகு பொலி ஆளாய் - மயில் வாகனத்தின் மீது அழகு செய்கின்ற திருவுருவத்துடன், முன் ஆர் அடியார் வந்து கூட - திரு முன்னே அருமையான அடியார் திருக்கூட்டம் வந்து கூடவும், மறலிபடை யம்புரமும் மீது ஓட - இயமனுடைய சேனைகள் அஞ்சி தங்கள் ஊரை நோக்கி ஓடுமாறு, பொருது - போர்செய்து, விருது பல முறைமுறையிலே ஊதி வாது செய்து - வெற்றிச் சின்னங்கள் வரிசைவரிசையாக ஊதி வாது செய்து, மதலை - சிறுவனும், ஒரு குதலை - தனிமை

யான அறிவில்லாதனுமாகிய, அடி நாயேனை ஆள - அடிமையேனை ஆட்கொள்ளும் பொருட்டு, இ(ங்)ஙன் - இவ்விடம், வந்திடாயோ - வந்தருளமாட்டீரோ?

## பொழிப்புரை

வளைந்த பற்களையுடைய மாறுபட்ட அரக்கர்கள் மீண்டு போகாது மாண்டு மண்ணில் விழவும், ஏழு தீவுகளுடன் கூடிய மண்ணுலகம் நடுங்கவும், பதினுலு உலகங்களும் அச்சத்தினுல் ஓவென்று இரையவும், பெண்ணும் ஆணுமாகிய யானைகள் அழியவும், திசைகளின் முடிவில் நிற்கும் யானைகள் நின்ற இடத்தைவிட்டு நீங்கவும், நீண்ட மலைகள் இடிந்து விழவும், பெரிய கடல் வற்றித் துகள்படவும், பெரிய வயிற்றையுடைய மகா காளி பூதகணங்களுடன் சேர்ந்து, மாண்ட அசுரர்களுடைய தசைகளைத் தின்று, பேய்களுடன் கூடி கூத்தாடவும், சூராதியரை வெற்றிபெற்ற தீரரே! வீரமுள்ள குறவர் குலத்தில் வந்த வள்ளி பிராட்டியாருடைய பாதங்களைச் சிறிதும் நாணுமல் சென்று பற்றி அருள்புரியும் பொருட்டு, கரடிகளும் புலிகளும் சதா திரிகின்றதும் கடினமானதும் விசாலமுடையதுமாகிய காட்டில், மிகவும் குளிர்ந்த இளமையான வேங்கை மரமாக நின்று, செழிப்புடன் நீண்ட மலையில் உலாவியவரே! கொடியதாகிய முயலகன் என்ற பூதத்தின் மீது திருநடனம் புரிகின்றவராகிய சிவபெருமானது இடப்புறத்தில் விளங்குகின்ற உமையம்மையார் பெற்றருளிய குமாரக் கடவுளே! குருமூர்த்தியே! தேவலோக வாசிகள் வழிபட அருள்புரிகின்ற தனிப்பெருந் தலைவரே! உறவினர் கதறி அழவும், ஊரவர்கள் என்மீது வைத்திருந்த ஆசையை விடவும், பறை திமிலை முதலிய வாத்தியங்களின் ஒலி விண்வரை செல்லவும், உலகில் உள்ள உறவினரும் ஊரவரும் என் வாய் மீதில் வாக்கரிசி போடவும் ஏற்படுகின்ற முடிவான நாள் ஒன்று உண்டல்லவா? அந்த நாளில், தேவரீருடைய கருணை பொழிகின்ற ஆறு திருமுகங்களும், பன்னிரண்டுகரங்களுடன்கூடியதிரண்ட புயங்களும், அழகிய அணிகலங்களுடன் தொங்குகின்ற காதுகளும், நீண்ட திருக்கண்களும், இரண்டு திருவடிகளில் விளங்கும் சிறந்த பாதச் சிலம்பும், அழகிய திருமார்பும், வேதங்கள் ஒலிக்கவும், தேவர்கள் கற்பக மலர் மழை பொழியவும், மலர் மாலையினின்றும் தேன்பொழியும் திருவயிற்றில் கட்டியுள்ள ஒளியுடைய மணிவடத்தின்மீது முப்புரிநூல் இலங்கவும், மயில்வாகனத்தின்மீது அழகு மிக்க திருவுருவத்துடன் தோன்றி, திருமுன் நிறைந்த திருத்தொண்டர்கள் கூடிவரவும், இயமனுடைய சேனைகள் தமது ஊரை நோக்கி ஓடுமாறு போர் செய்து, அதனுலாகிய வெற்றியின்பொருட்டு சின்னங்களை வரிசை வரிசையாக ஊதி வாதிட்டு, சிறுவனும் அறிவில்லாத தனியனும், திருவடியை நம்பியுள்ளவனுமாகிய நாயினேனை ஆட்கொண்டருளும் பொருட்டு வந்தருளமாட்டீரோ?



## விரிவுரை

### உறவின்முறை கதறி அழ:—

நமது ஆதரவில் இருந்தவர்களும், இத்தனை காலமாக யார் பொருட்டு இரவும் பகலும் உழைத்தோமோ அந்த தாய் மனைவி மக்கள் முதலியோர்களுமாகிய சுற்றத்தினர் உயிர் பிரியும்போது சுற்றியிருந்து அவமே இரங்கி அழுவார்கள். இயமனுடன் வாதிட்டு அவனை விரட்டவோ, நம் பொருட்டு உயிரை விடவோ மாட்டாதவர்களாகி கைவிட்டு நிற்பார்கள்.

### ஊரார்கள் ஆசையற:—

எத்தனையோ காலமாகப் பழகிவந்த ஊரில் உள்ளவர்கள் உயிர் பிரிந்தவுடன் நம்மீது வைத்திருந்த ஆசையை விட்டு விடுவார்கள்.

### பறைதிமிலை முழவினிசை ஆகாசமீதுமுற:—

உயிர்பிரிந்தவுடன் நமது வீட்டிற்குமுன் பலப்பல வாத்தியங்களை ஒலிக்கச் செய்வார்கள். அவ்வொலி ஆகாயம் வரை செல்லும்.

### அரிசி வாய்மீதிலே சொரியும்:—

காது குத்தும்போது வெல்லந் தடவிய அரிசியைத் தந்தார்கள். காது வழி பஞ்சாக்கரம் சடக்கரம் புகுந்து உயிரில் சிவமாகிய இனிமை ஏறவேண்டும் என்று குறிப்பிட்டார்கள். கல்யாண சமயத்தில் மஞ்சள் தடவிய அரிசியைத் தூவினுர்கள். உயிரில் அன்பு என்ற மஞ்சள் நிறம் உண்டாக்வேண்டும் என்று குறிப்பிட்டார்கள். சிவமாகிய இனிமையும், அன்பாகிய பசுமையும் என்பால் உண்டாகாமல் உயிர் துறந்ததனுல்

இறந்தவுடன் என் வாய்மீது வெறும் அரிசியைப் போடுவாராயினார்கள்.

### அந்த நாளில்:—

முடிவானநாள். அந்நாளில் நான்கு நிகழ்ச்சிகள் நிகழும். அவையாவன: (1) உறவினர் அழுவார்கள், (2) ஊரவர்வந்து கூடி ஆசையை விடுவார்கள், (3) பறையறைவார்கள், (4) வாக்கரிசியிடுவார்கள்.

இந்த நான்கு நிகழ்ச்சிகளுக்குப் பதிலாக வேறு நான்கு நிகழ்ச்சிகள் நிகழவேண்டும்; உறவின்முறையாருடைய அழுமுகங்களைப் பார்க்கப் படாது; அதற்குப் பதிலாக முருகா! உம்முடைய திருமுகங்களைப் பார்க்க வேண்டும்.

ஆசையறுகின்ற ஊரவர்கட்குப் பதிலாக, உமது திருத்தொண்டர் கூட்டம் வரவேண்டும்; எனது வாழ்நாள் முடிவிலே பறையறையக் கூடாது; அதற்குப் பதிலாக மறையறைய வேண்டும். வாய் மீது அரிசி சொரிவதற்குப் பதிலாக அமரர் தரு பூமாரி சொரிதல் வேண்டும்.

### உனது முக கருணை மலரோராறும்:—

முருகப் பெருமானுடைய திருமுகங்களில் எப்போதுங் கருணை பொழிந்த வண்ணமாக இருக்கும்; மலையினின்றும் அருவி பொழிவது போல் என்று அறிக.

"மூவிரு முகங்கள் போற்றி
முகம் பொழி கருணை போற்றி"

"கருணைகூர் முகங்களாறும் கரங்கள் பன்னிரண்டுங்
கொண்டே" —கந்தபுராணம்.

"கருணை பொழி கமலமுக மாறும்" —திருப்புகழ்.

### மறலிபடை யமபுரமு மீதோடவே:—

முருகப் பெருமான் வந்து அருள் செய்யும்போது, யமதூதர்கள் அஞ்சி ஓடுவர்.

### நாயேனையாள இனன் வந்திடாயோ:—

"முருகா! அடியேனுடைய ஆவி பிரிகின்ற காலத்து தேவரீர் வந்து அருள்புரிதல் வேண்டும்" என்று அடிகள் வேண்டுகின்றனர்.



அருணகிரிநாதர் ஆறுமுகப் பெருமானுடைய திருவருள் முழுவதும் பெற்றவர். இறவாத தன்மையை யுற்றவர்.

"அவமே பிறந்த எனை இறவாம லன்பர்புகும்
அமுதாலயம் பதவி அருள்வோனே"

என்று அடிகளே தனக்குக் கிடைத்த பெரும் பேற்றை வியந்து கூறுகின்றனர்.

"கூகா வெனஎன் கிளை கூடியழப்
போகா வகைமெய்ப் பொருள் பேசியவா"

என்று அநுபூதியில் கூறியருளினர்.

இவ்வாறு சாகாநிலை பெற்ற அடிகள், "உறவின் முறை கதறியழ" மரணம் வரும் நாளில் நீர் வந்து ஆட்கொள்ள வேண்டும் என்று கூறுவது அருள் பெறாத நம் பொருட்டுக் கூறியதாகும் என்று உணர்க. நாம் இத் திருப்புகழைப் பாடி உய்யும்பொருட்டே அடிகள் இதனைப் பாடியருளினர் என்பதனை.

"ஏனோரு மோது மாறு தீதற
நானுசு பாடி யாடி நாடொறு
மீடேறு மாறு ஞான போதக மன்புருதோ"
—திருப்புகழ்

### பிறையெயிறு முரணசுரர்:—

அசுரர்கட்கு கடைவாயில் பிறைச் சந்திரனைப் போன்ற வளைந்த பற்கள் உளவாகும். எப்போதும் நற்குணங்களுடன் மாறுபட்டிருப்பவர்களாதலின், "முரணசுரர்" என்றனர்.

"தரணியி லரணிய முரணிரணியன்"

என்று வகுப்பிலுங் கூறுகின்றனர்.

### எழுபுவி அதிர:—

ஏழு தீவுகளோடு கூடிய மண்ணுலகம்; ஏழுதீவுகள்:— நாவல், இறலி, குசை, கிரவுஞ்சம், புட்கரம், தெங்கு, கமுகு என்பனவாம்.

### உலகம் ஈரேழும் ஓலமிட:—

சூராதியவுணர்கள் செய்த பெருந் தீமைகட்கு ஆற்றாத அமரரும் முனிவரும் ஓலமிட்டனர்.

நண்ணினர்க் கினியாய் ஓலம் ஞானநா யகனே ஓலம்
பண்ணவர்க் கிறையே ஓலம் பரஞ்சுடர் முதலே ஓலம்
எண்ணுதற் கரியாய் ஓலம் யாவையும் படைத்தாய் ஓலம்
கண்ணுதற் பெருமா னல்கும் கடவுளே ஓலம் ஓலம்.

தேவர்கள் தேவே ஓலம் சிறந்தசிற் பரனே ஓலம்
மேவலர்க் கிடியே ஓலம் வேற்படை விமலா ஓலம்
பாவலர்க் கெளியாய் ஓலம் பன்னிரு புயத்தாய் ஓலம்
மூவரு மாகி நின்ற மூர்த்தியே ஓலம் ஓலம்.

## குறமறவர் கொடியடிகள் கூசாது போய் வருட:—

தீவிரதரமான ஆன்மாக்களை இறைவன் எளிதாகத் தானே சென்று வேண்டி ஆட்கொள்வன் என்ற குறிப்பினையுணர்த்து கின்றது வள்ளியம்மையாரை முருகவேள் அடிகள் வருடியருளிய வரலாறு.

## குளிர்கணியின் இளமரமதேயாகி:—

வள்ளியம்மையார் தன்னையுணராமையால், இறைவன் வேங்கைமரமாகி நின்முன். என்னை? வேடராஜனுகிய நம்பிக்கு அஞ்சியன்று; ஆயிரத்தெட்டு அண்டங்களையும் நூற்றெட்டு யுகங்களாக அரசுபுரிந்த சூராதியவுணரை மாய்த்த சத்ரு சங்கார வேலாயுதத்தையுடைய வித்தகனுதலின் என்க. வள்ளியம்மையாகிய ஆன்மாவுக்கு கலைஞானத்தினை யருளுதற் பொருட்டே வேங்கைமரமாயினுர். வேங்கைமரம் கலை ஞானமென அறிக.

ஆங்கது காலதன்னில் அடிமுதல் மறைக ளாக
ஓங்கிய நடுவண் எல்லாம் உயர்சிவ நூல தாகப்
பாங்கமர் கவடு முற்றும் பல்கலை யாகத் தானோர்
வேங்கையின் உருவ மாகி வேற்படை வீரன் நின்முன்.

## கொடிய தொரு முயலகன்.—

தாருகவனத்து இருடிகள் அபிசார ஓமஞ் செய்து முயலகன் என்ற பூதத்தை உண்டாக்கி சிவபிரானைக் கொல்லும் பொருட்டு ஏவினுர்கள். பரமபதி அப்பூதத்தைக் கொல்லாது அதனைத் திருவடியால் மிதித்து அதன்மீது நின்று திருநடனம் புரிந்தருளினுர்.

உ

திருச்சிற்றம்பலம்

# பெரியபுராணம்

## குலச்சிறை நாயனுர் புராணம்

"பெருநம்பி குலச்சிறைதன் அடியார்க்கும் அடியேன்"

பலரும் புகழ்ந்துரைக்கும் பழமையான புகழையுடையது பாண்டிநாடு; முத்தும் முத்தமிழும் சந்தனமும் செந்தண்மையும் உடைய நாடு அது. அந்நாட்டில் சிறந்த வளப்பங்களுடன் கூடிய நகரம் மணமேற்குடி என்பதாகும். கன்னலும் செந்நெல்லும் விளையும் வயல்கள் மருங்கே அணிந்திருந்தன. தரும குண சீலர்கள் அங்கு வாழ்ந்திருந்தார்கள். அத்திருப்பதிக்குத் தலைவர் குலச்சிறை நாயனுர். குலத்தைக் காப்பாற்றுபவர் ஆதலின் இத் திருப் பெயரையுடையவராயினுர். சுந்தரமூர்த்தி நாயனுர் தமது திருத் தொண்டத் தொகையினுள் "பெருநம்பி" என்று புகழ்ந்து ஓதிய பெருமையும் அருமையும் உடையவர். திருத்தொண்டில் திண்மையும் உண்மையும் பூண்டவர்.

---

முயலகன் என்பது ஆணவமலம் என்று உணர்க. ஆணவமலம் ஒருபோதும் அழியாது. அதன் வலி தேய்ந்து அடங்கி நிற்கும். அதனுல் இறைவன் முயலகனைக் கொல்லாது அதன் வலியை அடக்கியருளினுர்.

முயலகன் என்ற பூதம் மிகவும் கொடியது என்பதனைக் கீழ்வரும் பாடலினுலும் அறிக.

தூக்கியகால் நோகாதோ துட்ட முயலகன்மேல்
தாக்கியகால் தானுஞ் சலியாதோ— குருநமச்சிவாயர்

## கருத்துரை

அசுரரை வென்ற தீரரே! வள்ளிமணுளரே! உமை மைந்தரே! நமன் வரும் இறுதிநாளில் தேவரீர் வந்தருளி உறுதியளிக்கவேணும்.

காரணங் கண்ணுதற் கன்பர் என்னவே
வாரமாகி மகிழ்ந்தவர் தாண்மிசை
ஆரும் அன்பொடு வீழ்ந்தஞ் சலிமுகிழ்த்
தீர நன்மொழி யெய்த இசைத்துளார்.

சிவபெருமானுடைய திருவருளைப் பெறுவதற்கு அடிப்படையான காரணமாகவுள்ளவர்கள் சிவனடியார்களே என்று துணிந்து, அளவற்ற அன்புடன் அடியார்களைக் கண்டவுடன் மகிழ்ந்து நிறைந்த ஆர்வத்துடன் திருவடி மீது வீழ்ந்து, எழுந்து கூப்பிய கையுடன் நின்று குளிர்ந்த நன் மொழிகளையுரைப்பார்.

குறிக்கோளுடைய நான்கு குலத்தினர்களாயினும், அக் குலங்களினின்றும் நீங்கியவர்களாயினும், அறிவினால் சிவ பெருமானுக்கு அன்பு செய்வார்களாயின், அத் திருத் தொண்டர்களை பக்தியுடன் பணிந்து ஏத்துவார்.

குறியி னன்கு குலத்தின ராயினும்
நெறியின் அக்குலம் நீங்கின ராயினும்
அறிவு சங்கரற் கன்பரெனப் பெறில்
செறிவு றப்பணிந் தேத்திய செய்கையார்.

உலக நெறியில் மக்கள் இவை ஆம் என்று மேற்கொள்ளும் நலங்களையுடையவர்களாயினும், அவ்வாறு உலகினர் அன்று என்ற தீமைகளை மிகவும் உடையவர்களாயினும், சந்திரனைச் சடையில் தரித்த சங்கரருடைய அடியவர்களாயின் அவர்களை நிலமிசை வீழ்ந்து பய பக்தியுடன் பணியும் பண்புடையவர். சிவனடியார்கள் பெருங் கூட்டமாக வந்தாலும், தனித்து ஒருவர் வந்தாலும் அவர்களை அன்புடன் எதிர் கொண்டு, முகமலர்ந்து, அகனமர்ந்து, இன்சொல் கூறி உணவு ஊட்டுவார். திருநீறு, உருத்திராக்கம், கோவணம் என்ற சிவசாதனங்களைத் தரித்து, காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி பஞ்சாக்கரத்தை ஓதுகின்ற அடியவர்களை நாடோறும் போற்றிப் புகழும் நியதியுடையாராக குலச்சிறையார் வாழ்ந்தனர்.

இத்தகைய அருணலங்களையுடைய குலச்சிறையார், மதுரையை அரசு புரிந்த நின்றசீர்நெடுமாறனார் என்ற பாண்டிய மன்னனிடம் தலைமை அமைச்சராக விளங்கினார். பகைவர்களை வென்று அரசாங்கத்திற்கு உறுதி செய்தனர். இடையறாது இறைவரது திருவடிகளைச் செந்தமிழ்ப் பாடல்களினால்



துதி செய்வார். எங்கும் பரவிய புகழையுடைய பாண்டிமாதேவியாருடைய சிறந்த திருத் தொண்டுக்கு உண்மையாகத் தொண்டராகி நின்றனர். புன்மையான சமணருடைய பொய்ம்மைகளை நீக்கவும், பாண்டி நாட்டில் திரு நீற்றின் மெய்ம்மையைப் போற்றவும், நிலைபெற்ற சீகாழிப் பிள்ளையாரது திருவடிகளை முடிமேற் புனைந்து மகிழ்ந்த புண்ணிய சீலர், அனல்வாது புனல்வாது செய்து தோற்ற அமணர்களை அவர்கள் புரிந்த தீது தீர கழுவில் ஏற்றிய ஏற்றம் உடையவர். நீண்டகாலம் நின்றசீர்நெடுமாறனிடம் முதல் அமைச்சுத் தொழில் பூண்டு உலகமெல்லாம் சைவ நெறியைப் பரப்பி இறுதியில் இறைவன் இணையடி சேர்ந்தனர்.

## விளக்கம்

### மணமேற்குடி

இது அருமையான திருத்தலம்; ஆவுடையார் கோயிலிருந்து தென்கிழக்கில் மட்சாலை வழியாக 16கல் தொலைவில் அடையத்தக்கது. திருப்புனவாயிலிலிருந்தும் வடகிழக்கில் 8 கல் தொலையில் உள்ள மீன்பசல் சென்று, அங்கிருந்து வடகிழக்கில் 7 கல் சென்று இத் திருத்தலத்தை யடையலாம்.

### அடியார் பக்தி

அடியவர் வழிபாடே சிவனருள் பெறுவதற்கு எளிய சாதனமாகும். மக்களை மகிழ்வித்தால் அம் மக்களுக்கு உரிய தந்தையார் தாமே மகிழ்ச்சியுறுவார். அடியவர்க்குச் செய்த உபசாரங்கள் அத்தனையும் இறைவருக்குச் செய்தனவாகும். அதனால் இறைவர் மிகுந்த மகிழ்ச்சியுறுவர்.

" நடமாடுங் கோயில் நம்பர்க் கொன்றீயின்
படமாடுங்கோயில் பரமர்க் கங்காமே " —திருமந்திரம்.

இறைவனுக்குச் செய்யும் வழிபாடு ஆராதனை எனப்படும்; அடியவர்க்குச் செய்யும் வழிபாடு சமாராதனை எனப்படும். சம் ஆராதனை, சம்—நல்ல, ஆராதனை—வழிபாடு; நன்றாக வழிபட்டது ஆகும் அடியவர் வழிபாடு. அடியவர் வழிபாட்டினால் முத்திப்பயன் விரைவிலும் எளிதிலும் கிடைக்கும்.

பட்டினத்தடிகள் நேரே இறைவனை வழிபட்டனர். பத்திரகிரியார் பட்டினத்தடிகளை வழிபட்டனர். பட்டினத்தாருக்கு முன் பத்திரகிரியாரே முத்தி பெற்றனர் என்பதையுணர்க.

சிவநிந்தையினும் அடியவர் நிந்தனையே அதிபாதகமாம். சூரியன் முன் மணிக்கணக்காக நிற்கலாம். சூரியன் அருள் பெற்ற நொய்மணலில் சிலநிமிஷங்கூட நிற்கமுடியாது.

இரணியன் திருமாலைப் பலகாலும் நிந்தித்தனன். திருமாலின் அருள் பெற்ற பிரகலாதரை நிந்தித்துச் சிலகாலமளவேனும் வாழாது மாய்ந்து ஒழிந்தனன்.

" அடியார் மனஞ்சலிக்க எவராகிலும் பழிக்க
அபராதம் வந்து கெட்ட பிணிமூடி" —திருப்புகழ்

குலச்சிறை நாயனுர் அடியார் பக்தியிற் சிறந்தவர். சிவனருள் பெறுவதற்குப் பரம காரணமாவார் அடியவரே என்ற உறுதியுடன் வழிபாடு செய்தனர். "காரணங்கண்ணுதற் கன்பரென்னவே வாரமாகி மகிழ்ந்தவர் தாள்மிசை ஆரும் அன்பொடு வீழ்ந்து அஞ்சலி முகிழ்த்து ஈர நன்மொழி யெய்த இசைத்துளார்" என்ற திருப்பாசுரத்தை உய்த்துணர்க.

அடியவர் பக்தி புரிபவர் குலத்தின் உயர்வு தாழ்வைக் குறியாது எக்குலம், எக்குடி, எம்மரபினராயினும் சிவமாகவே எண்ணி வழிபடவேண்டும்.

உலகினர் கொள்ளும் நலம் என்பன ஆசாரம்—வேள்வி முதலியன. சிவன்பால் அன்பு முதிர்ந்தார்க்கு இவைகள் பொருளாகா. ஆசாரமில்லாத கண்ணப்பர் ஆசாரமுள்ளவர்களால் பணியப் பட்டதைச் சிந்திக்கவும்.

அடியவர் பக்தியில் தலை சிறந்த இத்திருவினரைச் சிவஞானப்பாலுண்ட திருஞானசம்பந்தர் தமது தேவாரத்தில் சிறப்பித்துப் பாடியருளினுர் என்னில் இவருடைய பெருமையை அளவிட வல்லார் யாவர்?

அத்திருப்பாடலை இதனடியிற் காண்க.

வேயனைய தோளுமையோர் பாகமது
வாகவிடை யேறிசடைமேல்
தூயமதி சூடிசுடு காடினட
மாடிமலை தன்னைவினவில்
வாய்கலச மாகவழி பாடுசெயும்
வேடன்மல ராகுநயனம்
காய்கணை யினலிடந் தீசனடி
கூடுகா ளத்திமலையே.



## சைவ சமயப் பாதுகாப்பு

உடம்பை வளர்ப்பது உணவு; உணர்வை வளர்ப்பது கல்வி; உயிரை வளர்ப்பது சமயம்; உயிரையின்றி உணர்வும் உடம்பும் சிறப்புறு. சமய ஞானமில்லாத கல்வியும், உலக வாழ்வும் சிறப்படையா. உடம்பை வளர்ப்பது தேசபக்தி, உணர்வை வளர்ப்பது குருபக்தி; உயிரை வளர்ப்பது சிவபக்தி யென அறிக. சமயஞானமே சகல நலங்களுக்கும் ஆணிவேராகும். சமயஞானமில்லாத வாழ்வு கடைகாலில்லாத மாடி வீட்டிற்கு நிகராகும். சமயத்தை வளர்ப்பது எல்லா அறங்களுக்குந் தலையாய அறமென நுண்ணுணர்வால் தெளிக. சைவசமயத்திற்கு இடர் வருகின்றபோது அதனை நீக்க மனமொழி மெய்களால் பாடுபடவேண்டும்.

"சமயத்தை அறியவோ அதனைப் பாதுகாக்கவோ எங்களுக்கு நேரமில்லை; நாங்கள் உயர்ந்த பதவிகளிலே அமர்ந்திருக்கின்றேம்" என்று சிலர் கூறவும் நினைக்கவும் கூடும். குலச்சிறை நாயனுர் பாண்டிய மன்னனிடம் முதல் மந்திரியாக இருந்தவர். பலப்பல அரசகாரியத்திலே ஈடுபட்டிருந்த அவர் சமய வளர்ச்சியில் தன் ஆயுள் முழுவதும் பாடுபட்டனர் என்பதை நினைவு கூர்க.

பயிரை வளர்த்தால்மட்டும் போதாது; பயிரை அழிக்க முற்படும் கோரைப்புல் முதலியவைகளைக் களைவதும் மிகவும் அவசியமாகும். அதுபோல் சமயத்தை வளர்ப்பதோடு அமையாது, அச்சமயத்தை அழிக்க முற்பட்ட சமண் சமயமாகிய களையை வேரோடு அழித்த சமயஞான வீரராகத் திகழ்ந்தவர் குலச்சிறையார். வாது செய்து தோல்வியுற்ற சமணர்களை அரச நீதிப்படி கழுவிலேற்றித் தண்டித்து திருநீற்றுச் சமயத்தை நாடெங்கும் பரப்பி நலம் புரிந்த இவர் பெருமை அளவிடற்கரியது.

சேக்கிழாரடிகள் இவரது பெருமையைப் பல பாடல்களினுல் இனிது புகழ்ந்தும், அமையாது,

" வாதிற்றேற்ற அமணரை வன்கழுத்
தீது நீங்கிட ஏற்றுவித்தார் திறம்
யாது போற்றினேன்? "

என்று கூறி நிறுத்துகின்றனர்.

உ

முருகா

# வேலைக்காரி

வேலைக்காரி அமைவது முற்பிறப்பிற் செய்த புண்ணியத்தை யொட்டியிருக்கின்றது. இரு வேலைக்காரிகளைப் பற்றி நாம் காவியங்களின் மூலம் அறிகின்றோம். ஒரு வேலைக்காரி உத்தம குணம் படைத்தவள். மற்றொரு வேலைக்காரி அதம குணம் படைத்தவள். ஒரு வேலைக்காரியால் தலைவர் வாழ்ந்தார்; மற்றொரு வேலைக்காரியால் தலைவர் மாய்ந்தார். பலர் வருந்தினார்கள். நாடும் நகரமும் கலங்கின. அரசு நிலை குலைந்தது. வாழவைத்த வேலைக்காரி யார்? தாழவைத்த வேலைக்காரி யார்? சிந்திப்போம்.

(1) முதலிலே நாம் நினைவு கூரத்தக்க உத்தம வேலைக்காரி சந்தனநங்கை. இவர் சிறுத்தொண்ட நாயனுருடைய வேலைக்காரியாக அமர்ந்திருந்தவர். பயிரவராக வந்து இறைவர் விரும்பியபடி சீராளதேவரை அறுத்து, தலையைப் புதைக்குமாறு தமது வேலைக்காரியாகிய சந்தனநங்கையார் கையில் தந்து தோட்டத்தில் புதைக்கச் சொன்னார்.

இறைவரையழைத்து வந்து கறியமுதுகளைப் படைத்தனர். பயிரவராக வந்த இறைவர் "தலைக்கறி எங்கே?" என்று கேட்டனர். "தலை இறைச்சி அமுதுக்கு ஆகாது எனக் கழித்தோம்" என்று திருவெண்காட்டு நங்கையார் கூறினார்கள். இறைவர் "அதுவும் கூட நாம் உண்பது" என்றார். இதனைக் கேட்ட சிறுத்தொண்டரும் திருவெண்காட்டுநங்கை யாரும் சிந்தை கலங்கி திகைத்து வருந்தினார்கள். அப்பொழுது சந்தன நங்கை என்ற வேலைக்காரி, சிறுத்தொண்டரைப் பணிந்து, "இவ்வாறு இவர் கேட்க நேரும் என்று நான் முன்னமேயே கருதி தாங்கள் கூறியவாறு தலையைப் புதைக்காமல் சமைத்துவைத்துளேன். இந்தாரும்" என்று தான் சமைத்ததை எடுத்துத் தந்தார்.

> சிந்தை கலங்கிச் சிறுத்தொண்டர் மனையாரோடுந் திகைத் தயரச்
> சந்தனத்தார் எனுந்தாதி யார்தாம் அந்தத் தலையிறைச்சி
> வந்தொண்டர் அமுது செயும் பொழுது நினைக்க வரும் என்றே
> முந்த அமைத்தேன் கறிஅமுதென் றெடுத்துக் கொடுக்க முகமலர்ந்தார்.

அப்பொழுது சிறுத்தொண்டருக்கு எத்துணை மகிழ்ச்சி யெய்தியிருக்கும்! அவருடைய மகிழ்ச்சியை அளக்க வல்லார் யார்? புதைக்கச் சொல்லி நாயனர் தந்த தலையை சந்தன நங்கை புதைத்திருந்தால் சிறுத்தொண்டர் சீராளரை யறுத்துக் கறி சமைத்தும் பயனின்றிப் போயிருக்கு மன்றோ? எனவே சிறுத்தொண்டரை வாழவைத்தவள் சந்தனநங்கையாகிய வேலைக்காரியே யாகும்.

(2) இப்பொழுது நினைவு கூரத்தக்க அதம வேலைக்காரி கூனி என்ற மந்தரை. இவள் தயரதனுடைய மனைவி கைகேயியின் வேலைக்காரி. இவளால் விளைந்த அநர்த்தத்திற்கும் அளவு உண்டா? எவ்வளவு பெரிய இடரை விளைவித்தாள். இளம் பருவத்தில் இராமர் இவள் கூன்மீது விளையாட்டாக ஒரு மண்ணுண்டையை எறிந்தார். சிறு குழந்தையின் செயல் என்று மறந்திருக்க வேண்டும். "நன்றல்லது அன்றே மறப்பது நன்று" அச் சிறிய செயலை மனதில் வேரூன்ற வைத்திருந்து, தயரதச் சக்ரவர்த்தி வசிஷ்டர் முதலிய ஆன்றோர்களுடன் ஆய்ந்து அரசவையில் முடிவு கட்டிய ராமர் பட்டாபிஷேகத்தையே மாற்றி விட்டாள். இவள் செய்த கலகத்தால் கைகேயி பழியுற்றாள். தயரதர் மாண்டார். ராமர் காடு புகுந்தார்; பரதர் நந்திக்கிராமத்தில் அந்தியும் பகலும் நீரருத கண்களுடன் கலங்கிக் கவன்றனர். நாடு நகரங்கள் யாவும் அழுது அழுது அரற்றின. கௌசலையும் சுமித்திரையும் அடைந்த துயருக்குத்தான் எல்லையுண்டோ?



---

நம்பி—ஆண்மக்களுக்குட் சிறந்தவன்; இவரை நம்பி யென்று மட்டும் கூறாது, "பெரும் நம்பி குலச்சிறை" என்று நம்பி ஆரூரர் தமது திருத்தொண்டத்தொகையுள் மிகவும் இனிமையாகப் பாராட்டுகின்றனர்.

பாண்டிநாடு முழுவதும் சமண இருள் மூடியபொழுது ஆணில் ஒருவரும் பெண்ணில் ஒருத்தியுமேதான் சைவத்தில் நிலைத்து நின்றவர்கள். ஆணில் குலச்சிறையார்; பெண்ணில் மங்கையர்க்கரசியார். இவரையொத்த அமைச்சரை இந்நாடு என்று பெறுமோ?

தயரதன் புலம்புவதாக குலசேகர ஆழ்வார் அருளிய திருப்பாடலேயும் இங்கு நினைவு கூர்க.

தேனகுமா மலர்க் கூந்தல் கௌசலையுஞ் சுமித்திரையுஞ்
சிந்தை நோவக்
கூனுருவக் கொடுந் தொழுத்தை சொற் கேட்ட கொடிய
வள் தன் சொற்கேட்டின்று
கானகமே மிகவிரும்பிப் போகின்ருய் நீதுறந்த வள
நகரைத் துறந்து யானும்
வானகமே மிக விரும்பிப் போகின்றேன் மனுகுலத்
தோர் தங்கள் கோவே.

தொழுத்தை—வேலைக்காரி.

---

ஓம்.
முருகா
முருகன் புகழ்பாடி முத்தமிழ்தனை வளர்ப்போம்

# திருப்புகழ் அமிர்தம் வாழ்த்து

(வெண்பா)

வெற்றிமிகு வேலினையும் வீறு மிகுமயிலும்
உற்ற துணையாகக் கொண்டுலகில் – நற்றமிழில்
மக்கள் மகிழவரும் மாதிருப்பு கழ்அமிர்தம்
எக்காலும் வாழ்க இனிது.

தண்டமிழும் சைவமுமே தாரணியில் பேர்பெற்று
பண்டைத் தமிழ்நாடு போன்ருக்க—தொண்டுசெயும்
வீரத் திருச்சைவர் வெற்றிகிரு பானந்தர்
தாரணியில் வாழ்க தழைத்து.

நாடு நலம்பெறவும் நல்வாழ்வு தான்பெறவும்
பாடு படுபவர்கள் நற்பலனைத்—தேடிடவே
என்றென்றும் ஓம்முருகா! என்றியம்பு எவ்விடரும்
நன்று மறைந்திடுமே நாடு.

சுப. சாத்தப்பன்
சண்முகநாதபுரம்

உ
முருகா

# கற்பு

## "காதால் கேட்டதும் பொய்"

சென்னைமாநகரம் பொருள் நிறைந்த பட்டினம் மட்டு மன்று; அருள் நிறைந்த பட்டினமுமாகும். செல்வச் சீமான் களும், கல்விக் கோமான்களும் நிறைந்து வாழ்கின்ற சிறப் புடையது. வடகோடியில் திருவொற்றியூர்; எழுத்தறியும் பெருமான் எழுந்தருளியுள்ள திருத்தலம் அது; தென்கோடியில் மயிலாப்பூர்; அம்பிகையே மயிலுருவந் தாங்கி இறைவனை வழி பட்ட திருத்தலம். திருவொற்றியூர் முற்றுந்துறந்த முழுஞானி பட்டினத்துப்பிள்ளையார் முத்தி பெற்ற பெருமையுடையது; மயிலாப்பூர் திருஞானசம்பந்தர் எலும்பைப் பெண்ணுக்கிய அருமையுடையது. அறுபத்து மூன்று நாயன்மார்களுள் வாயி லார்நாயனுர் திருக்கோயிலும் திருவள்ளுவர் திருக்கோயிலும் மயிலையில் உண்டு. ஆழ்வாரால் பாடப்பெற்ற திருவல்லிக்கேணி என்னுஞ் சிறந்த தலத்தையும் தன்னகத்தேகொண்டு விளங்கு கின்றது. இவையின்றி இராமலிங்க அடிகள் பாடியருளிய கந்தசுவாமி கோயில் என்னுங் கந்தகோட்டமும், பாம்பன் சுவாமிகள் பாடியருளிய ஷண்முகக் கோட்டமும் மிகவும் சிறப் பாக உள்ளன.

இரண்டாவது அருணகிரிநாதர் என்று ஆன்ருேர்கள் வியந்து கூறுகின்ற ஸ்ரீமத் சுத்தாத்வைத சித்தாந்த சரபம், பாம்பனடிகள் வாழ்ந்த தலம். சித்தாந்த சண்டமாருதம், ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர நாயக்கர் வாழ்ந்து அரிய விரிவுரைகளும் பெரிய நூல்களும் எழுதியது இத்தலமேயாகும்.

வள்ளல் பச்சையப்ப முதலியார்; இசைவாணர்களாகிய வீணை குப்பையர்; சிங்கராச்சார்யர்; டைகர் வரதாச்சார்யர்; பட்டணம் சுப்ரமண்ய ஐயர் முதலியோர்கள் வாழ்ந்த சீரும் சிறப்பும் உடையது. எண்ணிறந்த கோயில்களும், கண்ணி றைந்த மாடங்களும், கல்லூரிகளும், இசையரங்குகளும், காவனங்களும், பூவனங்களும் நிறைந்திருக்கின்றன. பரந்த நகரம்; சிறந்த புகழின் சிகரம்,

இத்தகைய சென்னைமா நகரில் திருவல்லிக்கேணியில் பெரிய உயர்ந்த ஒரு வீட்டில் வாழ்கின்றாள் கலைவாணி. அவள் கணவனார் கன்னியப்ப முதலியார். அவர் தம்பி சீரங்கன். சீரங்கனுக்கு வயது 15. கன்னியப்ப முதலியாருக்கு வயது 35. சீரங்கன் ஒருவயது சிறுபிள்ளையாக இருக்கும்பொழுதே தந்தை காலமானார். தம்பியைக் கன்னியப்பர் மைந்தனைப்போல் அன்புடன் வளர்த்தார். தாயும் சில காலத்தில் பரலோகஞ் சேர்ந்தாள். கன்னியப்பர் மனைவி கலைவாணி நற்குணங்கள் அனைத்திற்கும் உறைவிடமானவள். கொழுந்தனிடம் அன்பாகவே நடந்தாள். சீரங்கனுக்கு யாதொரு கவலையும் கிடையாது. செல்வப்பிள்ளையாகச் சீரும் சிறப்புமாக வளர்ந்தான். கன்னியப்பர் அதிகம் படிக்கவில்லை. கொத்துவால்சாவடியில் காப்பிக் கொட்டை வியாபாரம் புரிந்துகொண்டிருந்தார். கடவுள் கருணையினால் நாலைந்து லக்ஷம் பணம் சேர்ந்தது. நிலம், வீடு, வண்டி, ஆள் முதலிய எல்லாம் அமைந்தன.

சங்கணி என்ற ஒரு வேலைக்காரி இருந்தாள். அவள் நல்ல கருப்பு. முன் கோபக்காரி; கோள்மூட்டுபவள். பிறர் துன்பத்தைக் கண்டு இன்புறுகின்ற மனம் படைத்தவள். சுருங்கச் சொன்னால் கூனியின் இரண்டாவது அவதாரம் என்று கூறலாம். ஒரு நாள் அவள் நடையில் படுத்து உறங்கிக் கொண்டிருந்தாள். அதிகாலை. இன்னும் நன்றாக விடியவில்லை. சீரங்கன் எழுந்து அவசரமாக சிறுநீர் கழிக்கும்பொருட்டுச் சென்றான். நடையில் படுத்திருந்த சங்கணியின் கை நன்றாக மிதிக்கப்பட்டது. அவள் அலறியெழுந்தாள். தன்னை மிதித்தது சீரங்கன் என அறிந்தாள். பொல்லாத வாயை உடையவள். "என்னதான் இருந்தாலும் இப்படியா கண் தெரியாமல் நடப்பது? படிக்கின்ற பிள்ளைக்கு இதுகூடவா தெரியவில்லை. அப்பா! உயிரே போகின்றாப்போல் வலிக்கின்றதே. நாசமாப் போக. கால் ஒடிய. கண்ணும் மண்ணும் தெரியாமல் நடக்கின்ற கண்மூடி! தகப்பனாரில்லாத தறுதலை. அடக்குவார் ஒருவருமில்லை. அவிழ்த்து விட்ட காளையைப்போல் அலைகின்றது" என்று சொன்மாரி பொழிந்தாள். சீரங்கன் திரும்பிவருகின்றவன், "என்ன சும்மா பிதற்றுகின்றாய்? மலைப்பாம்புபோலே உன்னை யார் நடையிலே படுக்கச் சொன்னார்கள். படுக்க இவ்வளவு பெரிய வீட்டிலே இடமா இல்லை? இருட்டிலே எனக்கு நீ படுத்திருந்தது தெரியவில்லை. ஒரே மூச்சாக ஏன் இப்படி அலறுகின்றாய்?" என்று கூறிவிட்டுப் படிக்கத் தொடங்கினான்.



இந்த சத்தத்தில் கலைவாணி எழுந்தாள். வேலைக்காரியை நோக்கி "என்ன சங்கதி" என்று கேட்டாள். "ஒன்றுமில்லையம்மா உயிரே துடிக்குது. வேணுமென்றே என் கையை மிதித்துவிட்டு, நான் மலைப்பாம்புபோலே படுத்துக்கொண்டிருக்கின்றேனாம். அது என்னைக் கண்டபடி திட்டுகின்றது. வயது சிறிசு. வாய் பெரிசு" என்று அளந்தாள். கலைவாணி, "சங்கணி! சிறுபிள்ளை என்னமோ அவசரத்திலே அறியாமல் மிதித்திருக்கும். அதற்காக நீ இப்படி ஏன் பேசுகின்றாய். யாராவது வேண்டுமென்றே மிதிப்பார்களா? தம்பி படிக்கின்றது. அதன் கவனத்தை வீணில் செலுத்தாதே. பேசாமல் போ!" என்று அதட்டினாள். சங்கணி ஜபஞ் செய்பவளைப்போலே ஏதேதோ முணுமுணுத்துக் கொண்டாள். ஏற்கனவே கருத்த முகம் கோபத்தால் மேலும் கருத்தது. மனம் கொதித்தது. கண் சுழன்றது. உள்ளம் அழன்றது. வெகுளி வேரூன்றியது. சீரங்கனைத் தன் பிறவிப் பகைபோல் பார்த்தாள். அவனை எப்படியாவது குடும்பத்தை விட்டுப் பிரித்து விரட்டக் கருதி உறுதி கொண்டாள். அதற்கு வழி வகைகளைச் சிந்தித்தாள்.

நாட்கள் சில கடந்தன. ஒருநாள் தோட்டத்தில் உள்ள ஒரு சுவர் மீது சாய்ந்துகொண்டு சிரித்தாள். அவ்விடம் வந்த கலைவாணி,

"ஏண்டியம்மா! நீயே சிரித்துக்கொள்ளுகின்றாய். என்ன அதிசயத்தை நினைத்துக்கொண்டாய்".

"ஒன்றுமில்லையம்மா (ம்...... என்று ஒரு பெரு மூச்சு விட்டு) வெளியே சொன்னால் வெட்கம். உலகமே வர வர மிகவும் மோசமாகிவிட்டது. நன்றியில்லாதவுலகம்".

"என்னடி! ஏன் சிரித்தாய் என்று கேட்டால் என்னமோ சொல்லுகின்றாய். காரணம் இன்றி ஏன் சிரித்தனை? அதைச் சொல்லு."

நான் ஒன்றுஞ் சொல்லமாட்டேனம்மா. எல்லாம் நாளானால் உனக்கே தெரியும். வீணாக நான் கெட்ட பேர் வாங்கிக்கொள்ளமாட்டேன். இந்த காலத்தில் நின்றாலும் தப்பு; இருந்தாலும் தப்பு; நடந்தாலும் தப்பு; கிடந்தாலும் தப்பு; ஒன்றும் சொல்லிக்கொள்ளுகிற தினுசில் இல்லை. போய் துண்டு பின்னுங்கள்.

"சும்மா சொல்லு; என்ன சங்கதி?"

"அம்மா! நீங்கள் வருத்தப்படாதீர்கள். பொய் சொன்னால் வாய் புழுத்துப் போகும். அதோ மலைவாயில் விழுகின்ற சூரியபகவானுக்குத் தெரியும். அந்தப் பிள்ளையிருக்குதே உங்கள் மச்சினப்பிள்ளைதான். தன்னுடன் படிக்கின்ற ஒரு பையனிடம் சொல்லிக்கொண்டிருந்தது. நான் பின்புறமாக இருந்து கேட்டேன். உங்கள் முகம் சட்டிமாதிரி இருக்கின்றதாம். உங்கள் கண்ணு ஆந்தைமாதிரி விழிக்கின்றதாம். அறிவுக்கும் உங்களுக்கும் ஆயிரம் மயிலாம். தனக்குக் கல்யாணம் ஆனபிறகு தன் மனைவியை விட்டு உங்களைத் திட்டப் போகுதாம். தாய்போலே இருக்கின்ற உங்களை இப்படி தன் சினேகிதனிடம் பேசுகின்றதே என்று எண்ணி எண்ணி சிரிக்கின்றேன்".

"சங்கணி! என்ன? என் முகம் சட்டிமாதிரியாகவா இருக்கின்றதாம். அதுவா அப்படிச் சொல்லியது. வளர்த்த கடா மார்பில் பாய்கின்றது. தாயில்லாத பிள்ளையாச்சே என்று எவ்வளவோ செல்வமாக வளர்த்தேன். என்னை வேண்டுமானால் அதுவே திட்டட்டுமே? கல்யாணம் ஆன பிறகு தன் மனைவியைக் கொண்டா திட்டவேணும். சரி இதை ஒருவரிடமும் சொல்லாதே. அதன் அண்ணுவுக்குத் தெரிந்தால் வீண் கலகம் வரும். என் பிள்ளை என்னை வைதால் நான் யாரிடம் போய் சொல்லுவேன். கடவுள் அதற்கு நல்ல புத்தியைத் தரட்டும்".

"அம்மா! உங்கள் மனம் தங்கக் கம்பியாயிற்றே. திரிலோகத்திலும் உங்களைப்போலே ஒரு உத்தமியைப் பார்க்க முடியுமா? உங்களை நிந்தித்தவர்கட்கு கடவுள் நல்ல கதியைத் தரமாட்டார். நான் இதுபற்றி மூச்சுகூட விடமாட்டேன்".

மறுநாள் மாலை கலைவாணி கோயிலுக்குப் போயிருந்தாள். கன்னியப்பர் கடைக்குப் போயிருந்தார். சிரங்கன் வீட்டிற்கு வந்தான். வேலைக்காரிமட்டும் இருந்தாள். "எங்கள் அண்ணி எங்கே?" என்று கேட்டான்.

"தம்பி! அண்ணி கோயிலுக்குப் போயிருக்கின்றார்கள். அதோ அலமாரியில் பலகாரமும் காப்பியும் இருக்கின்றன. கைகால் கழுவிவிட்டு சாப்பிடு. பாவம் தாயாவது இருக்கணும். தகப்பனாராவது இருக்கணும். உனக்கு இருவருமில்லை, ம்........" என்று பெருமூச்சு விட்டாள் அவள்.



"ஏன். தாய் தகப்பனார் இல்லையானால் என்ன குறைந்து போச்சு. எங்கண்ணுதான் எனக்கு அப்பா. எங்கண்ணிதான் எனக்கு அம்மா. பெற்ற தாயைவிடப் பேரன்புடைய அண்ணியிருக்கும்போது எனக்கென்ன குறை".

"தம்பி! உன்மாதிரி வெள்ளை மனம் உடைய பிள்ளையை நான் கண்டதில்லை. கள்ளமில்லாத உள்ளம். நீ நினைக்கின்ற மாதிரி மற்றவர்கள் நினைப்பார்களா? உன்னைப் பார்க்கும்போது எனக்குப் பரிதாபமாக இருக்கின்றது. வெளியே சொல்லாதே. நீ பள்ளிக்கூடம் போன பிறகு உன்னைப்பற்றி உங்கண்ணி உங்கண்ணுவிடம் என்ன என்ன சொன்னார்கள் தெரியுமா? அதை நான் சொல்ல விருப்பவில்லை. வீணாக நான் கலகம் பண்ணியதாக முடியும். எல்லோரையும் காப்பாற்றப் பொதுவாகத் தெய்வம் இருக்கின்றது. நீ போய் படி".

"அம்மா! என்ன சங்கதி? என்மீது என்ன பிழை? எங்கண்ணுவுக்கு என்மீது உயிராயிற்றே. அண்ணுவிடம் அண்ணி என்ன சொன்னார்கள். உள்ளதைச் சொல்லு. ஒரு வேளை என்னையறியாமல் ஏதாவது நான் பிழை செய்திருப்பேனாயின் அதனைத் திருத்திக்கொள்ளுவேன்".

"தம்பி! உன்மீது ஒரு பிழையும் கிடையாதே. உன் அண்ணி சொன்னார்கள். உனக்கு வரவர மதம் பிடித்துப் போச்சாம். உனக்குச் சோறுபோடுகின்றது பாம்புக்குப் பால் வார்க்கின்றதற்குச் சமானமாம். உங்கண்ணி யாரோ ஒரு ஜோசியனிடம் குழந்தை பிறக்குமா என்று கேட்டதற்கு, "உன் கொழுந்தன் இறந்தால்தான் உனக்குக் குழந்தை பிறக்கும்" என்று அந்த சாஸ்திரக்காரன் சொன்னானும். ஆகையால் உன்னை.........சொல்ல நாக்கு கூசுகின்றது" என்று கண்ணைக் கசக்கினாள்.

இதைக் கேட்டதும் சிரங்கன் பேச்சை நிறுத்திக்கொண்டான். புத்தகத்தை எடுத்துக்கொண்டு தெருப்பக்கமுள்ள தான் படிக்கின்ற அறைக்குள் சென்றான். படிப்பில் கவனஞ் செல்லவில்லை. தனக்குள் சிந்திப்பான். இக்காலத்தில் யாரைத் தான் நம்புவது? தாய்க்கு நிகரான அண்ணியின் மனம் மாறி என்னைக் கொல்ல நினைப்பாளாயின் இதனினும் கொடுமை என்ன இருக்கின்றது? அதை அண்ணனுங் கேட்டுக்கொண்டு சும்மா இருப்பாராயின் இதற்குக் காரணம் பெண் மயக்கமல்லவா? உலகத்திலே ஆவதும் அழிவதும் பெண்களாலேதான்.

தயரதன் மாண்டது பெண்ணுலன்றே? என்னவுலகம்? பேயுலகம்; பிச்சுலகம்; மாயவுலகம்; சீ சீ; வெறியுலகம்; கருணையில்லாத கலியுலகம்.................................

அன்று தொட்டு கலேவாணியிடம் சீரங்கன் வெறுப்பாக நடந்துகொண்டான். சிடுசிடு என்று விழுவான். அவளும் அவனுக்கு அன்பாக உணவு படைப்பதில்லே. சங்கணி தன்யோசனே பலித்துவிட்டது என்று பெரிதும் மகிழ்ச்சியுற்று, நாடோறும் தனித்தனியே இருவரிடமும் கோள்மூட்டி வந்தாள். கலேவாணியிடம், நீ பூசினிக்காய்மாதிரி பொதுபொது என்று ஊதியிருக்கின்ருயாம்; உன்முகம் முதலேமாதிரி யிருக்கின்றதாம், ஆமைமாதிரி அசைகின்ருயாம், விடியாமூஞ்சியாம். இப்படியெல்லாம் உன் கொழுந்தன் சொல்லுகின்ருன் என்பாள். சீரங்கனிடம் உங்கண்ணி சொல்லுகினுள்—நீ உருண்டையாம்; மக்குபிளாஸ்திரியாம்; சத்தக்கட்டையாம்; செல்லாத காசாம்; உதவாக்கரையாம்; புத்தியில்லாத பொரி உருண்டையாம் என்பாள். இருவர்களும் அவள் சொல்லே நம்பி இருவர் உள்ளங்களிலும் சினத்தீ மூண்டது. பகையென்னும் புகை கப்பியது.

இப்படியும் அப்படியுமாக ஒருமாதம் ஓடியது. வர வர சீரங்கனுக்கு உலகவாழ்வு கசந்துவிட்டது. இனி நாம் இந்தவுலகில் இருந்து என்னபயன்? அண்ணியோ ஆலகாலம் போல் இருக்கின்ருள். அண்ணனே என்ன ஏது என்று கேட்பதில்லே. மாண்டு ஒழிவதே தக்கது என்ற முடிவுக்கு வந்தான். நஞ்சினே வாங்கித் தயாரித்துக்கொண்டான். காலேயில் நீராடினுன். முருகனது திருவுருவப் படத்தை வைத்துப் பூசித்தான். நஞ்சைக் காப்பியில் கலந்து முருகனுக்கு நிவேதித்தான். மாளுமுன் சிறிது நேரம் தியானம் புரியவேண்டும் என்று கருதி கண்களே மூடி தியானத்தில் ஆழ்ந்தான். தற்செயலாக அங்கு வந்த கலேவாணி படத்திற்கு முன் காப்பியைக் குடிக்காமல் வைத்திருப்பதையும், சீரங்கன் கண்களே மூடி யசையாமல் அமர்ந்திருப்பதையும் கண்டாள். "சூடாகக் காப்பியைக் குடிக்காமல் என்ன கண்மூடிப் பூசை; பூசை முடிந்தபின் வேறு காபி சூடாகத் தருவோம்" என்று எண்ணி அந்தக் காப்பியையெடுத்து வேலேக்காரியிடம் தந்து, இந்தா நீ குடி; அது என்னமோ கண்ணேமூடி மண்பொம்மை மாதிரி உட்கார்ந்து கொண்டிருக்கின்றது. பிறகு வேறு காபி தயாரித்துத் தரலாம்; இது வீணுகக் கூடாது. சாப்பிடு" என்ருள். வேலேக்காரி சங்கணி சந்தோஷமாக காப்பியை வாங்கி, இதை யெல்லாம் வீட்டில் வைத்திருக்கக் கூடாதம்மா; அடிச்சு விரட்டு. சுத்த மோசமான பையன்" என்று கூறிக்கொண்டே காப்பியைக் குடித்தாள். சிறிது நேரத்திற்குள் மயங்கிக் கீழே விழுந்தாள். உள்ளே சென்ற நஞ்சு அவளுக்கு வேதனேயை உண்டாக்கியது. மயிர்க்கால்கள் தோறும் ஊசியை நாட்டியதுபோல் துடித்தாள். கடகட வென்று புரண்டாள்.

தியானத்தில் இருந்த சீரங்கன் கண்களேத் திறந்து பார்த்தான். சுவாமிக்குமுன் வைத்திருந்த காபியைக் காணுது திகைத்தான். மனம் திடுக்கிட்டது. வெளியே வந்து பார்த்தான். வேலேக்காரி படுகின்ற வேதனேயைக் கண்ணுற்ருன். அருகில் அண்ணனும் அண்ணியும் பரிதாபத்துடன் 'அம்மா! என்ன? என்ன? உடம்புக்கு என்ன?' என்று கூவிக்கொண்டு நிற்பதையுங் கண்டான். 'அண்ணி! பூஜையில் வைத்திருந்த காபி எங்கே?' என்று கேட்டான். கலேவாணி, "காபி ஆறிவிட்டது; உனக்கு வேறு தரலாம் என்று எண்ணி அதை இவளுக்குக் கொடுத்தேன்" என்ருள். அதைக் கேட்டு சீரங்கன் எல்லேயில்லாத துன்புற்று விஷயத்தை வெளியே சொல்லாமல் நின்ருன்.

வேலேக்காரி விரள விரள விழித்தாள். குழறிய சொற்களுடன் "ஐயோ ஐயோ" என்று அலறினுள். "அம்மா! தம்பி ஒன்றுமே சொல்லவில்லே. தம்பி! அண்ணி உன்னேப்பற்றி ஒன்றுமே சொல்லவில்லே. எல்லாம் என்னுடைய கற்பனேச் சொற்களே. ஐயோ. உண்ட வீட்டிற்கு ரெண்டகம் பண்ணினேன். ஐயோ!" என்று குழறிக் குழறிக் கூறினுள். சிறிது நேரத்திற்குள் பேச்சும் மூச்சும் நின்றுவிட்டன.

அவள் சொன்ன சொற்களேக் கேட்டு சீரங்கன் கலேவாணியை நோக்கினுன். அவளும் அவனே நோக்கினுள். இருவருக்கும் விஷயம் விளங்கிவிட்டது. இருவர்களேயும் கன்னியப்ப முதலியார் நோக்கினுர். "என்ன சேதி" என்று வினவினுர். கலேவாணி தன்னிடம் வேலேக்காரி கூறியவைகளே எல்லாம் கூறினுள். சீரங்கனும் தன்னிடம் கூறியவைகளேக் கூறினுன்; தான் சாகத் துணிந்ததையும், காப்பியில் நஞ்சு கலந்து வைத்ததையும் கூறினுன். கன்னியப்பர் "ஒருவர் கூறிய சொற்களே அப்படியே நம்பிவிடக்கூடாது. "காதால் கேட்டதும் பொய்; கண்ணுல் க்ண்டதும் பொய்" என்பது பழமொழி.

# ஏன் இந்த மாறுபாடு?

K. S. சுந்தரமூர்த்தி, புவனகிரி.

இவ்வுலகில் ஒருவன் இன்பமுடன் வாழ்கிருன். ஒருவன் துன்பப்படுகிருன். ஒருவன் மணிமுடி தரித்து பலர் போற்ற வாழ்கிருன். ஒருவன் தலையில் ஓயாது சும்மாடுகட்டி 'கூலியோ கூலி' யென்று கூவி சுமை சுமந்தும், இடுகாட்டிற்கு விறகு சுமந்தும் துன்புறுகிருன். ஒருவனுடைய கண்கள் நற்பொருள் நிறைந்த காக்ஷியைக் கண்டும், நல்ல ஒளியை யுடையனவாய் நலமுடன் விளங்குகின்றன. இன்னொருவனுடைய கண்கள் காலமுழுதும் ஒழியாமல் துன்பத்தினுல் கண்ணீர் சொரிந்து கொண்டிருப்பனவாய் விளங்குகின்றன. ஒருவனுடைய செவியானது சுபகாரியங்களையே கேட்டுக்கேட்டு ஆனந்திக்கின்றது. மற்ருெருவன் செவியானது துன்பச் செய்தி கேட்டு துடி துடிக்கிறது. ஒருவனுடைய நெஞ்சம் நினைந்து நினைந்து என்றும் மகிழ்கிறது. இன்னொருவன் நெஞ்சம் பகீரென திடுக்கிட்டு நடுங்கி ஒடுங்குகிறது. ஒருவனுடைய கையானது, கடகம் மோதிரம் முதலிய அணிகலன்களால் சிறந்து யாசிப்பவர்க்குப் பொற்காசுகளை அள்ளிக்கொடுத்து பெருமையுடன் விளங்குகிறது. மற்ருெருவன் கையானது பிறர் நகைக்க மனை தொறும் போய் பல்லையிளித்து ஐயா! ஐயா! என்று அரைக் காசுக்கு விரித்து நீட்டி இடருறுகிறது.

ஆண்டவன் படைப்பில் இந்த மாறுபாடு ஏன்? தாயைப் போன்றவன் இறைவன் என்று அறநூல்கள் கூறுகின்றனவே? வேதங்கள் போற்றும் முதல்வனு மனிதவாழ்வில் இத்தனை மாறுபாடுகளை உண்டாக்கி யிருக்கிருன்? "கருணை நிறைந்து அகம்புறமும் துளும்பி வழிந்து உயிர்க்கெல்லாம் களைகணுகித் தெருள் நிறைந்த இன்ப நிலை வளர்கின்ற கண்ணுடையோன்"

---

வினையை விதைத்தவள் வினையையறுத்துக் கொண்டாள். எல்லாம் இறைவன் செயல்" என்ருர்.

சீரங்கன் அண்ணி கலைவாணியின் கால்மீது வீழ்ந்து அழுதான். கொழுந்தனுரை யெடுத்துக் கண்ணீரால் ஆட்டி அவன் மனத்தழுக்கை மாற்றினுள் கலைவாணி. பண்டுபோல் ஒற்றுமையாக இருந்தார்கள்.

—:—



இவ்வாறு வேறுபாடுகளை உண்டாக்குவானே? என்று பற்பல வாறு எண்ணம் தோன்றி நம்மை வதைக்கிறது.

இந்த மாறுபாட்டின் உண்மையை நாம் யாவரும் தெரிந்து தெளியும்படி நமக்கு "அருட்பா" விளக்குகின்றது.

நம்மைப் படைத்த இறைவனை சதாகாலமும் நினைந்து, அவன் புகழ்தனை நம் வாயார வாழ்த்தி வழிபடுதல்வேண்டும். ஆண்டவனுடைய அடிமலரை வணங்குதற்காகவே தலை ஏற்பட்டது. கண்கள் படைத்ததன் பயன் இறைவனுடைய அருள் திருமேனியைக் கண்டு மகிழ்வதற்கேயாம். அமலன் அருளை நாடி அவன் பால் அகங்குழைந்து, அவன் செயலிலே உணர்வு பெருகி, அன்பால் அவனைத் தேடி, அவன் புகழ்தனை தன் இரு செவி வழியாக ஆவலுடன் கேட்டு, இன்பத்தைப் பருகவே செவியேற்பட்டது. இறைவனை நெஞ்சால் நினைந்து நினைந்து நெக்குருகி வழிபடுதல் வேண்டும். நறுமலர்களைக் கொண்டு அருச்சனை புரிந்தும், ஏனைய தொண்டுகள் புரிந்தும் வாழ்வதற்கே இறைவன் கையைப் படைத்தான்.

இவ்வாறு இறைவனைத் தலையாரக் கும்பிட்டும், கண்களாரச் சேவித்தும், நெஞ்சார நினைந்தும், கையாரக் கூப்பித் தொழுதும், நாவாரப் பாடியும், அன்பு செய்து வழிபட்டோனே இப்பிறவியில் எல்லாச் செல்வத்தையும் பெற்று இன்பமுடன் வாழக் காண்கிருேம்.

இவ்வாறு இல்லாமல் இதில் மாறுபட்டு இறைவனை மறந்து, வேறு பொருளைப் பற்றியே பேசிக் காலத்தை கழித்தோனே இப்பிறவியில் கூழுக்கும் ஏக்கற்றிருக்கிருன். மெய்யனின் திருவடிதனை வணங்காத தலையே இப் பிறவியில் ஓயாது சும்மாடு சுமந்து கூலிக்கு உழைக்கிறது. இறைவனுடைய திவ்ய மங்கள வடிவைக் காணுது உலகிலுள்ள பகட்டுப் பொருள்களைக் கண்டு களித்த கண்ணே இப் பிறவியில் கலநீர் சொரிந்த அழுகண் என்ருர் "இராமலிங்கஅடிகள்". கடவுளுடைய புகழ்தனை ஏற்க மறுத்த செவியே இப்பிறவியில் துன்பச் செய்தி கேட்டு துடி துடிக்கிறது.

இறைவனை நெஞ்சால் நினைந்து வழிபாடு செய்யாதவனுடைய நெஞ்சம் இப்பிறவியில் பகீரென நடுங்கி ஒடுங்குகிறது. இறைவனுடைய முன் இருகைகளாலும் அஞ்சலி செய்து வணங்க கூசினேனுடைய கையே இப்பிறவியில் யாசித்து பிறர் இகழ இடருறுகிறது.

உ
சிவமயம்
ஸ்ரீ குருதெட்சணமூர்த்தி சுவாமிகள் துணை.

# தெய்வம் ஒன்று உண்டு

அழ. அ. அழகப்பன், சோக்கலிங்கம்புதூர்

(நிகழ்ந்த செய்தி)

தெய்வத்துக்குப் பக்தி செய்தலும், செய்க்கு உரம் போடுதலும், வீண்போகா என்று பெரியோர் கூறுவர். அவ் வாக்கியம் முற்றிலும் உண்மை என்பதை நான் என்னுடைய 25 வயதிற்குள் உண்மையாகவே நடந்து அநுபவித்ததை வெளியிடுகின்றேன்.

சுமார் 15 ஆண்டு தொடங்கித் திருவாரூரில் தெட்சணமூர்த்தி சுவாமிகள் மடம் என்று ஒன்று இருப்பதை நாங்களறிந்து அந்த மூர்த்தியினுடைய திருவுருவப்படத்தை வீட்டில் நிறுவித் தினந்தோறும் தியானம், நைவேத்தியம், ஆராதனை முதலியன செய்துவருகின்ருேம். ஆண்டு தோறும் அங்கு நடக்கும் குருபூஜைக்குச் சென்று தெரிசித்து வருகின்



ருேம். நீட்டிக்கொண்டே செல்வானேன். எங்கள் குடும்பத்தில் யாரும் உணவு அருந்தச் சென்ருல்கூட அந்த மூர்த்தியைத் தியானம் செய்துகொண்டுதான் செல்வது வழக்கம். இது இங்ஙனம் இருக்க, எனக்கு மணமாகி ஏழு ஆண்டுகள் ஆகின்றன. ஆண்டவன் அருளால் இரண்டு ஆண் குழந்தைகளும் ஒரு பெண் குழந்தையும் கிடைத்திருக்கின்ருர்கள். மூத்தக் குழந்தைக்கு அந்த மூர்த்தியின் நாமத்தையே (குறுக்கிவிடாமல்) சதா கூவியழைப்பதற்காகத் தெட்சணமூர்த்தி என நாமம் சூட்டினேம். தற்பொழுது அந்தக் குழந்தைக்கு 6-வது ஆண்டு நிகழ்கின்றது. குழந்தையும் தன் பாட்டனர், அதாவது என் மாமனர் வீட்டில் செல்வமாக வளர்க்கப்பட்டு வருகிருன். எங்கள் ஊரிலிருந்து சுமார் 5 மைல் தூரத்தில் உள்ள, பள்ளத்தூரிலே என் மாமனர் வீடு இருக்கிறது. நாளது விக்ருதி ஆனி மீ 11உ ஞாயிற்றுக்கிழமை மாலே 4 மணிக்கு என் மாமனர் ஒரு பொதுஸ்லத்திற்குச் சென்றுவிடவே அன்னர் மனைவி பையனுக்குக் காப்பியைக் கொடுத்துவிட்டு தான் வீட்டினுள் வேலையாக இருக்கும் பொழுது பையன் என்ன விதமாகவோ (இன்னும் அவனல் சொல்ல முடியவில்லை.) வெளிப்புறத்திலுள்ள கேணியில் விழுந்துவிட்டான். சத்தம் கேட்கவே உள்ளே காரியம் பார்த்துக் கொண்டிருந்த என் மாமியார் பையனை அழைக்க, பதில் இல்லாதது கண்டு ஓடி வந்து கேணியின் பக்கம் திரும்பிப் பார்க்க வாளியும் கயிறும் இல்லாதது கண்டு திடுக்கிட்டுக் கேணியை எட்டிப் பார்க்க உள்ளே ஒன்றுமில்லாமல் குமிழி வந்ததையும் சில விநாடிகளுக்குப் பின் தலை தெரிந்ததையும் கண்டு சத்தமிடவே அக்கம் பக்கத்திலுள்ளோர் ஓடி வந்து பொதுஸ்தலத்திற்குச் சென்றிருந்த என் மாமனரையழைக்கச் சென்று அழைத்து வரவே அவர்களுடன் இச்செய்தி கேட்டு ஓடிவந்த ராஜு என்பவர் படிக்கட்டு இல்லாத அக்கேணியினுள் கயிற்றின் மூலம் இறங்கி நீச்சுத் தெரியாமல் தத்தளித்துக் கொண்டிருந்த அக் குழந்தையைத் தூக்கி வைத்துக் கொண்டு பிறகு வாளி ஒன்றைக கட்டி அதன்மூலம் குழந்தையை மேலே எடுத்தார்கள். குழந்தை சௌக்யமாக இருக்கிருன்.

கேணியில் ஐந்து ஆள் ஆழத்திற்கு நீர் நிறைந்திருக்கிறது. கேணியினுள் இறங்கியவருக்குப் பல இடங்களில் பதட்டம் காரணமாகக் காயம் பட்டுவிட்டது. ஆனல் நான் வணங்கும்

---

ஆதலால், இறைவன் படைப்பில் வித்தியாசமின்றிதான் படைப்பித்தான். உயிர்களின் நல்வினை தீவினைக்குத் தக்கவாறு தான் இப்பிறவியில் நாம் பயனை அனுபவிக்கிருேம். நல்லதும், கெட்டதும் நாமேதான் தேடிக்கொள்கிருேம். ஆகையால் இனியேனும் வாழ்வில் உண்மை நெறியைக் கடைப்பிடித்து, நிலையாய் நின்று நல்லன்போடு, நல்லறம்நாளும் புரிந்து, தூயனை நினைந்து, ஒழுக்கமுடன் வாழ்ந்து, இறைவனின் திருவடியை நினைந்து, நாவாரத் துதித்து, தலையாரக் கும்பிட்டும், நிமலனின் திருமேனியை நம் புறக் கண்ணுல் மட்டும் பார்க்காமல், அகக் கண்ணுலும் கண்டு, களிப்புற்று, அவனுடைய திருப்புகழை நம் இரு செவிகளாலும் கேட்டு ஆனந்தித்து, அவன் அருளை நினைந்து நெஞ்சம் நெகிழ்ந்து, அப் பரம கருணுநிதியான இறைவனின் முன் இரு கைகளாலும் அஞ்சலி செய்து இந்த உடம்பு எடுத்த பயனை அறிந்து உத்தமனைக் காண அன்பு செய்து அவனுடைய அருட்செல்வத்தைப் பெறுவதற்குப் பெரிதும் விரும்புவோமாக.

உ
முருகா

# திருப்புகழும் வள்ளியும்

தணிகைமணி, வ. சு. செங்கல்வராய பிள்ளை, எம். ஏ. அவர்கள்.

• **வள்ளியம்மை:**

(i) (1) திருமாலின் மகள்:
''திருமால் அளித்தருளும் ஒரு ஞான பத்தினி'' 1218

(2) திரு (இலக்குமி)வின் மகள்.
'திருமகள்'-112, 238, 244

(3) பிரமன் தங்கை;
'விதியானவன் இளையாள்' (1185)

(4) சுந்தரவல்லி (பழைய பெயர்).
'சுந்தர குறம் பெண்' (65)

(5) அமுதவல்லியின் (தேவசேனையின்) தோழி:
''அமுத மாதுவின் நல் தோழிமாது' (788)

(6) சிவமுனிவர் மகள்:
'முனிபெறு புனமான்' (513)

(7) மான் ஈன்ற மகள்:
'மான் ஈனும் அரிவை' (1053)

(8) வேடர் குலத்து விநோத மகள்:
''வியாதர்கள் விநோத மகள்' (352)

(i) வர்ணனை:

குயில்மொழிக் கயல்விழித் துகிர் இதழ்ச் சிலை நுதற்
சசிமுகத்திளநகைக் கனகுழற்றனகிரிக் கொடியிடைப்
பிடிநடைக் குறமகட்டிரு, (672)

---

அந்தத் தெட்சணாமூர்த்தியின் கிருபையினால்தான் (அதில் சிறிதேனும் சந்தேகமில்லை) என் குழந்தை கேணியினுள் தத்தளித்த கால்மணிநேர சாவகாசத்தில் சிறிதும் தண்ணீர் குடிக்கவில்லை. ஒருதரத்திற்குமேல் தண்ணீருக்குள் முழுகவில்லை. ஒரு சிறு காயம்கூடப் படவில்லை. இந்த சமயத்தில் அந்தக் கடவுள்தான் கை கொடுத்துத் தாங்கினார் என்பதும், கடவுளை நம்பினோர் கைவிடப்படார் என்பதும் இதன்மூலம் நான் கண்டறிந்த உண்மை.

---



கொச்சை மொழிச்சி கறுத்த விழிச்சி சிறுத்த இடைச்சி
பெருத்த தனத்தி குறத்தி' (128)

(ii) நிறம்:

பச்சை நிறம்-'பச்சைக் கொச்சைக் குறவி' (476)

(iii) அழகு:

'எழுதிட அரிய எழில் (1080)
'மடலூடே எழுத அரியவள் (825)
'ஆரினும் அழகு மிகப்பெற்று (1199)

'அகத்தின் அழகு முகத்தில் தெரியும்'- என்பதற்கு ஏற்ப அறுமுகவேள் வள்ளியைத் தனது அகத்திற் கொண்டிருந்தாராதலின் வள்ளியின் இதய தாமரையை ஒக்கும் அறுமுகவேளின் திருமுகத் தாமரை என்கின்றார் அருணகிரியார்.

'' தெய்வவள்ளிசே அகம் அன்ன வதனம்புய!
(கந். அந். 64)

(iv) 'பேச்சின் அழகு'

'இந்தளாம்ருத வசனம் (289), (பண் – இந்தளம் – நாத நாமக்கிரியை;) 'ரஞ்சிதாம்ருத வசனம் (79): 'நல்ல கொல்லியைச் சேர்க்கின்ற சொல்லி' (பண் கொல்லி-நவரோக) (கந் அலங் 10): சர்க்கரை முப்பழம் ஒத்த மொழிச்சி குறத்தி (300)

(v) உடை

'பீலியும் இலையும் உடுத்திட்டு 1199

(iv) தொழில்:

பரண்மீதிருந்து, கவண்கல் எறிந்து, தினைப்புனங் காத்தல்
'வேடர் செழுந்தினை காத்து இதண் மீதிலிருந்த பிராட்டி' 1008

'ஆயுத கவணொரு கைச்சுற்றி விளையாடும்
வேடுவர் சிறுமி' 1199

(vii) கருணையும் திருவும்

கருணையகலா விழிச்சி, களபம் அழியா முலைச்சி. கலவி தொலையா மறத்தி (521)

முருகவேளின் பெரும்புகழுக்குக் காரணம் அவர் வள்ளியோடு கொண்ட திருவிளையாடலே. கண்ணப்ப நாயனரது

எச்சிலை உண்டதாலும், சுந்தரமூர்த்திப்பெருமானுக்குத் தூது சென்றதாலும், சிவபிரானது புகழ் பெருகி நிற்பதுபோல, வள்ளிக்கு வேடை கொண்டதால் முருகவேளின் புகழ் ஓங்குகின்றது. இவ்வுண்மையை உணர்ந்த அருணகிரியார் முருகவேளைக்காட்டிலும் வள்ளியையே பெரிதும் பாராட்டுவர்; அம்மட்டும் அல்ல; வள்ளியம்மையின் ஏற்றத்தை வாழ்த்தி வாழ்த்தி முருகவேளின் எளிமையைத் தாழ்த்தித் தாழ்த்திப் பாடுவர். அங்ஙனம் தாம் தாழ்த்தப்படுதல் முருகவேளுக்கு விருப்பே ஒழிய வெறுப்பு இல்லை.

ஏரேறு தணிமலைத் தெய்வமே நான்இன்று
செப்புவேன் எங்கள் வள்ளிச்
செல்வநா யகிபெருமை, பத்தியொடு புத்தியின்
செம்மைத் திறங்க ளெல்லாம்:

"ஆரேயிவ் வறிவிலி என் பெருமை தன்னிலும்
அவள்பெருமை மேலதாக
அடுக்கடுக் காயுரைக் கின்றனன் என்றுநீ
அழுக்காறு கொள்ள மாட்டாய்;
காரேயு குழல்வள்ளி பெருமையைக் கேட்ட ஓர்
களிப்பு பூரிப்பினுலுன்
கவசம் பிளந்திடும் புதுப்புதுக் கவசங்கள்
கட்டினும் பிளந்து வீழும்
ஏரேறு மயிலேறி என்முனே வந்து நீ
என்னையும் புரந்தருளுவாய்
இவ்வுண்மை அருணகிரி நாரதர்அறி வாரன்றி
யாவர்பிறர் அறிய வல்லார்!

(viii) மாமிக்கு (பார்வதிக்கு) உகந்த மருமகள்:

'பார்வதியார்க்கும் இனித்த பெண் ஆகிய மான்மகள்' 789

(ix) வனதேவதைகள் வள்ளியை மலரிட்டுத் தொழுது வழிபட்டது:

அடவி வனிதையர் தனதிரு பரிபுர
சரண மலரடி மலர்கொடு வழிபட
புனமதி னிதுறை தனிமான்' 516

(x) வள்ளியின் அருமைத்திருநாமங்கள்:

அமுத சொருபி, அமுதாசனத்தி, இன்பரச சத்தி, எயினர் குலோத்தமை, கலைக்கொம்பு, காவற்பாவை, கிராத குலதிலக



மான், கிராதலக்ஷ்மி, சந்தானமாது, கசிஞானரம்பை, சோதிப்பிரகாசச்செயலாள், ஞானதனத்தி, பட்டாள், பெண்கள்நாயகம், பருகக்கரும்பு, மாயக்குறமாது, முத்தமிழ்மான், மூலஞானமங்கை, வேட்பதிவ்ருதை, வேதச்சொருபி.

எவ்வெவ்வாறு வள்ளியிடம் முருகவேள் தமது காதற்பெருக்கத்தைக் காட்டினுர் என்பதை அருணகிரியார் நன்கு காட்டியுள்ளார்; உதாரணமாகச் சில கூறுவாம்.

வள்ளியிடம் முருகர் கொண்ட காதலும்
வள்ளிக்கு அவர் செய்த தொண்டுகளும்

(1) வள்ளிக்குக் காணிக்கையாக (உடுக்கத்) தழை ஏந்திச் சென்றது:

'வள்ளி புனமேசென்று * * கொய்து தழையே
கொண்டு செல்லு மழவா! கந்த! (389)

(2) வள்ளி யிருந்த காட்டுக்கும் ஒரு கும்பிடு போட்டது:

'அடவியும் தொழும்பொடு தொழும்படி
அநுராக அவசமும் புனைந்து' [1151]

(3) தினையைக் குத்துதற்கு உலக்கையாக வள்ளிக்கு யானையின் தந்தத்தைப் பறித்துக் கொடுத்தது

"குற (குற்றுதற்கு) குறச் சத்திக்கு (வள்ளிக்கு) அத்திக் கோடு (யானையின் தந்தத்தை) பறித்துக் கொடு (கொடுத்த) ஆதி! (கந்-அந்-11)"

(4) கைத்தாளம் இட்டு வள்ளியை இரண்டு கையாலும் கும்பிட்டது

"கொண்டல் நிறத்தோன் மகளைத் தரைமீதே
கும்பிட கைத்தாள மெடுத்து * * புகழ் * *
அறுமுகப் பெருமாளே, (867)

"எயினர் மயிலை * இருகை தொழுது புணர்மார்பா! (1069)
மன்றற் பைம்புனத்தாள் பதாம்புயம் வந்திக்கும்
தனிக்காம வாஞ்சையன் [பூத-வகுப்பு]

(5) உலகர் சிரிக்க, லஜ்ஜையை விட்டு, வள்ளிக்கு மெய்க்காவற்காரனுயிருந்து (Body guard), அவளோடு வேளைபார்த்து கூடிக் குலவியது.

"இலஜ்ஜையற்று, எழுபாரும் வெறுத்துச் சிரிப்ப
நட்பொடு வேளை யெனப்புக்கு நிற்கும் வித்தக". 1186

'புனம்வாழும், கோலப் பெண் வாகுகண்டு
மாலுற்று வேளைகொண்டு கூடிக் குலாவும்**பெருமாளே' 1241

'இதுவேளை யென்று கிராத * * * மானுடன் கலவிபுரிவாய்' 1245

'திருமானை * அவசமாய்த் தொழுது * பொழுது
போக்கிய பெருமாளே' 1181

'மேதகு குறத்தி திரு வேளைக்காரனே (திருவகுப்பு)
'மயிலென இருக்கும் ஒரு வேடிச்சி காவலனே' (ஷெ)
'குறத்தி கிங்கரன்' 1233

(6) யானை, மான், கிளி இவையெலாம் உருகி நிற்கத் தினைப் புனத்தில் நின்று இசைபாடித் துதித்து வள்ளிக்கு உவகை ஊட்டியது:

'கரி நற்கலைத் திரள், கற்புடைக்கிளி, உட்கருத்துருகத் *
தினைக்குள் இசைத்து, இசைபாடி, * குயிலை * கைப்பிடித்த
மணப் பெருமாளே' 1024

'கொங்கைக் கொப்பாகும் வடகிரி, செங்கைக் கொப்பாகும்
நறுமலர், கொண்டைக் கொப்பாகும் முகிலென
வனமாதைக் கும்பிட்டுக் காதல் குனகிய இன்பச் சொற்பாடும்
இளையவ 945

(7) வள்ளியின் காலைக் கூசாமல் வருடியது

குறமறவர் கொடி யடிகள் கூசாது போய்வருடு 1143
குறமான் வனத்தில் மேவி அவள் கால் பிடித்து 790
மாது குறமகள் பாதம் வருடிய மணவாளா 225

(8) வள்ளியை அருச்சித்து வெட்சிமாலை சூட்டியது

அர்ச்சித்து கொச்சைத் தத்தைக்கு
செச்சைத் தொடை சூழ்வாய் 474

(9) தினைப்புனம் காக்கும் தொழிலைப் புதிதாகக் கற்றுக்கொண்டு நாள்தோறும் (வள்ளிக்கு உதவியாக) குயில், கிளி வராது தினை காத்தது;

நாடொறும் மயில் பயில் குயில் கிளி
வம்பிலே கடி தொண்டினேனே 768
வம்பு—புதுமை
தினைகாவல் கொண்ட முருகா 902

10 வள்ளியைக் கண் காட்டி வேட்டது:

'குன்ற வேட்டியைக் கண் காட்டிக் கொண்டு வேட்டு' 373

[தொடரும்]

Printed & Published by M. Madhusoodana Sivam at the Thiruppugal Amirtham Press, 144 Swaminaicken Street, Chindaripeta, Madras, Editor: Sri Kirupanandavari.

**சத்தியஞானசபைத் தூபி நீராட்டுவிழா நினைவுமலர்;**

இது மிகவும் சிறந்த நூல்; சத்தியஞான சபையின் அமைப்புக்களின் தத்துவங்களைக் கூடுமானவரை விளக்கித் திருவருள் துணைகொண்டு எழுதப்பெற்றது. ஞானசபையில் கருங்கல்லில் பொறித்துள்ள இனிய திருவருட்பாக்களையும், அருட்பெருஞ்ஜோதி அகவலையும் இதில் யாவரும் படித்துப் பயன்பெறும் பொருட்டு வெளியிடப்பட்டது. அமிர்தம் சந்தாதாரர்கள் அனைவரும், மற்றவரும் தவறாது இந்த உயர்ந்த நூலை வாங்கிக் கருத்தூன்றிப்படித்து நன்மை யடைவார்களாக.

விலை ரூ. 1-0-0, தபாற் செலவு 0-5-0.

| | விலை. | தபாற்செலவு. |
|---|---|---|
| கந்தரலங்காரம் (உரையுடன்) சுமார் 400 பக்கங்கள் கொண்டது. | 3- 0-0 | 0-8-0 |
| திருப்புகழ்த் திரட்டு (திருப்புகழ் 246ம், திருவகுப்பு முதலியனவும் அடங்கியது) | 2- 0-0 | 0-7-0 |
| திருவருட்பா(தொகுப்பு) தொகுதி 1 | 0- 8-0 | 0-6-0 |
| ,, 2 | 0- 8-0 | |
| மணிமொழிகள்(60) | 0- 8-0 | 0-5-0 |
| திருச்செந்தூர் முருகன் பிள்ளைத்தமிழ் | 0- 8-0 | 0-5-0 |
| பவழேந்திரி (கற்புக் கதை) | 0-12-0 | 0-5-0 |

*படங்கள்*

| | |
|---|---|
| ஆறு படைவீட்டுப் படம் | 0-6-0 |
| வடலூர் சத்தியஞான சபை | 0-4-0 |
| இராமலிங்க சுவாமிகள் | 0-4-0 |

படங்களுக்கு ஆறு படங்கள்வரை போஸ்டேஜ் பாக்கிங்செலவு எட்டணு.

---

**விநாயகபுராண வசனம்:**

விநாயகரது தோற்றவரலாறுகளையும், திருவிளையாடல்களையும், வழிபட்டுப் பேறுபெற்றோர் வரலாறுகளையும், வழிபடுவதற்குரிய நூற்றெட்டு, ஆயிரத்தெட்டு நாமங்களையும் தெளிவாகவும் விரிவாகவும் கூறும் நூல். ஆயிரம் பக்கங்கள் உள்ளது. விலை ரூ 8—0—0. தபாற்செலவு 0—14—0.

| | | |
|---|---|---|
| வழிகாட்டி (திருமுருகாற்றுப்படைக்கு விரிவான உரை) திரு. கி. வா. ஜகந்நாதையரவர்கள் எழுதியது | 2-8-0 | 0-6-0 |
| மயூரவாகன சேவன வெள்ளிவிழா மலர் | 1-0-0 | 0-5-0 |
| மகாத்மாஜீ உபதேசமலர் (வேலூர். மு. பெருமாள்) | 1-0-0 | 0-5-0 |
| திருத்தணிகேசன் திருவிளையாடல் (ஆ. சுப்பிரமணிய நாயகர்) | 0-8-0 | 0-5-0 |
| நவவீரர் நவரத்தினக்கலிவிருத்தம் (பாம்பன் சுவாமிகள்) (திரு.சே.த. இராமலிங்கம் பிள்ளையவர்கள் உரையுடன்) | 0-2-6 | 0-0-9 |
| பழநித் திருவிளையாடலின் சுருக்கம் | 0-2-0 | ,, |
| தெய்வசக்தி | 0-2-0 | ,, |

